# வரலாற்றின் வஞ்சகமும் நிகழ்காலத்தின் கட்டுப்பாடுகளும்...



## உஸ்மானிய-வஹாபி மோதல்

( மறக்க முடியாத கடந்த காலத்தின் மூலைகளின் சுற்றுப்பயணம் )

ஆக்கம் T.M முஆத் (வாஹிதி)

1744 ஆம் ஆண்டில், அரேபிய தீபகற்பத்தில் தொடர்ச்சியான உள்நாட்டுப் போர்களுக்குப் பிறகு முஹம்மது பின் ஸுஊத் என்பவரால் முதல் சவுதி அரசு நிறுவப்பட்டது, அது அப்போது ஒட்டமோன் / உஸ்மானிய பேரரசின் கட்டுப்பாட்டிற்கு வெளியே இருந்தது.

அப்துல் அஸீஸ் பின் முஹம்மது பின் ஸுஊத் மற்றும் ஸுஊத் பின் அப்துல் அஸீஸ் பின் முஹம்மது பின் ஸுஊத் ஆகியோருடன் யெமன் மற்றும் அரேபிய வளைகுடாவின் புறநகர்ப் பகுதிகளுக்கு அரசு விரிவடைந்தது, மேலும் 1803 ஆம் ஆண்டில், வஹாபிகளின் (அவர்கள் தங்களை அல் முவஹ்ஹிதீன்/ தௌஹீத்வாதிகள் என்று அழைத்தனர்) படையெடுப்பு தொடங்கியது.

உஸ்மானிய பேரரசின் ஆளுகைக்குட்பட்ட ஹிஜாஸ் தேசத்தில் இருந்து வரும் ஹஜ் யாத்திரீகர்களைத் தடுப்பது மற்றும் ஹிஜாஸில் உஸ்மானியர்களின் அதிகாரத்தை கட்டுப்படுத்துவது , ஈராக் மற்றும் சிரியா ஆளுநர்கள் மூலம் உஸ்மானிய கலீபாவின் பட்டத்தை வெளிப்படுத்தும் மத அதிகாரத்தின் சின்னமான ஹிஜாஸை மீட்டெடுப்பதற்கான பிரச்சாரங்கள் மேற்கொள்வது போன்ற நடவடிக்கைகளை

மேற்கொண்டனர். இருந்தபோதிலும், அவர்கள் அதில் தோல்வியைத் தழுவிக் கொண்டனர்.

ஏப்ரல் 6, 1818 இல், இப்ராஹிம் பாஷா (முகமது அலியின் மகன்) தலைமையிலான எகிப்தியப் படைகள் றியாத் / தர்இய்யா (வஹாபி சவுதி அரேபியாவின் தலைநகரம்) வந்து ஐந்து மாதங்கள் நீடித்த முற்றுகையை மேற்கொண்டனர்.

அதே ஆண்டு செப்டம்பரில், சல்மான் ஆகா ஷர்கஸி மற்றும் அலெக்ஸாண்திரியாவின் தளபதி கலீல் பாஷாவின் வருகைக்குப் பிறகு, இராணுவத்தின் முக்கிய கட்டளை முடிவுக்கு வந்தது ., எகிப்து உஸ்மானிய ஆட்சியாளர் இப்ராஹிம் பாஷா இறுதித் தாக்குதலுக்கான தனது உத்தரவை வெளியிட்டார்: அவர் கூறியதாவது "இன்றைய நாளில் எந்தப் பின்வாங்குதலும் இல்லை ஒன்று நாம் இருக்க வேண்டும் அல்லது தர்இய்யா இருக்க வேண்டும் " எனக் கூறினார் .

1818 ஆம் ஆண்டு செப்டம்பர் ஒன்பதாம் தேதி, வஹாபிகள் பேச்சுவார்த்தை நடத்த முயன்றனர், அப்பேச்சுவார்த்தையை இப்ராஹிம் பாஷா ஒப்புக்கொண்டார்.

அப்துல்லா பின் ஸுஊத் அதில் கலந்து கொண்டு தன் தோல்வியை ஒப்புக்கொண்டார், மேலும் இரண்டு நாட்களுக்குப் பிறகு அவரது படைகள் சரணடைந்தன. தளபதி இப்ராஹிம் பாஷா மதீனா நகரத்திற்குள் நுழைந்தார்.

செப்டம்பர் 11, 1818, சுல்தானகத்தின் படைகளின் வெற்றியையும், சவுதி அரசு மற்றும் தவ்ஹீத் இயக்கம் என்று அழைக்கப்படும் வஹாபி இயக்கத்தின் தோல்வியையும் சுல்த்தான் இப்ராஹீம் பாஷா அவர்கள் அறிவித்தார்கள்.

அப்துல்லா பின் ஸுஊத் கெய்ரோவுக்கு அனுப்பப்பட்டார், பின்னர் அங்கிருந்து இஸ்தான்புல்லுக்கு அவரது மூத்த உதவியாளர்களுடன் அனுப்பப்பட்டார் அதன் பின் அங்கு அவர்கள் தூக்கிலிடப்பட்டனர். அவர்களது மரணத்தின் போது இடப்பட்ட கட்டளையில் வந்துள்ளதாவது சுல்தான் அவர்கள்....

“சுல்தானின் ஆயுதங்களின் வெற்றிக்காகவும், மக்காவையும் மதீனாவையும் அழித்து, ஹஜ் யாத்ரீகர்களின் இதயங்களில் அச்சத்தைப் பரப்பி பெரும் ஆபத்தை ஏற்படுத்தி அட்டூழியம் செய்த கும்பலை அழித்ததற்காகவும் இறைவனுக்கு நன்றி தெரிவிக்கும் வகையில் "பொது பிரார்த்தனை செய்ய உத்தரவிட்டார்.

இவ்வாக்கத்தில் உஸ்மானிய - வஹ்ஹாபி மோதலில் அறிவார்ந்த காரணிகளைக் கொண்டு வருவது முக்கியமான விடயமாகும், மேலும் ஒட்டமோன் உஸ்மானிய கிலாபத் ஆட்சியில் சூஃபித்துவத்தின் முக்கியத்துவம் என்பது தவிர்க்க முடியாத ஒன்றாகும் இது கிட்டத்தட்ட அவ்விஸ்லாமிய ஆட்சியின் அதிகாரப்பூர்வ கோட்பாடாக மாறியது.

புகழ்பெற்ற ஆன்மீக அறிஞர் இமாம் ஜலாலுத்தீன் ரூமி ரஹிமஹுல்லா அவர்களுடன் தொடர்புடைய (பெக்தாஷி மற்றும் மவ்லவியா, மற்றும் நக்ஷபந்தியா, தரீக்காக்கள் பெரிதும் தாக்கம் செலுத்தின . தற்போதைய துருக்கி ஜனாதிபதி றஜப் தய்யிப் அர்துகான் அவர்கள் கூட ஓர் நக்ஷபந்தியா சூபித்துவ ஆன்மீக மரபுடன் தொடர்புள்ளவர் என்பதும் கூடுதல் தகவலாகும். விஷயம் இவ்வாறிருக்க இதற்கு நேர்மாறாக, முஹம்மது இப்னு அப்துல் வஹ்ஹாப் (கி.பி 1115 - 1206) இன்றைய சவுதி அரேபியாவின் நஜ்தில் தோன்றி சூபிகளை கடுமையாக விமர்சிக்கத் தொடங்கினார்.

அவர்களைக் காபிர்கள் கபுரு வணங்கிகள் எனும் நவீன கோஷத்தை தன் கொள்கையாக அறிவித்தார் இதன் விளைவாக அன்றைய ஹிஜாஸில் பெரும் சர்ச்சை எழுந்தது

இவருக்கெதிரான கண்டணங்கள் மக்கா மதீனா முப்திகள், அறிஞர்களிடையே வலுத்தன அவரது தந்தையும் உடன் பிறந்த சகோதரரும் கூட அவரை வழிகேடன் எனக் கூறியது மட்டுமன்றி அவருடைய கொள்கைகளுக்கெதிராக புத்தகங்களும் வெளியிடப்பட்டன. அவற்றுள் அவர் உடன் பிறந்த சகோதரர் ஸுலைமான் பின் அப்துல் வஹ்ஹாப் எழுதிய (அஸ்ஸவாயிக்குல் இலாஹிய்யா பிர் றத்தி அலல் வஹ்ஹாபிய்யா) "வஹ்ஹாபிகளுக்கு மறுப்பளிக்கும் தெய்வீக முழக்கம்" எனும் நூல் பிரசித்தம் வாய்ந்ததாகும். இவ்வாறு அறிஞர்களின் கண்டனத்துக்கு மத்தியிலும் இப்னு அப்துல் வஹ்ஹாப் பிரித்தானிய உளவாளிகளுடன் கள்ள உறவை மேற்கொண்டு தன்கொள்கையினை இளைஞர்கள் மத்தியில் கொண்டு செல்வதில் அதிக கவனம் செலுத்தினார் யூத ஏகாதிபத்தியவாதிகளின் உதவியுடன் அதில் வெற்றியும் கண்டார் இளைஞர்கள் அவருடைய நவீன சித்தாந்தங்களால் கவரப்பட்டனர்.

இவ்வஹ்ஹாபிஷ அடிப்படைவாதமே பிற்காலங்களில் அரபுலகிலும், ஏனைய ஆசிய மற்றும் ஆபிரிக்க நாடுகளிலும் இஸ்லாமிய உம்மத்தில் சிந்தனை ரீதியான அடிப்படைவாத பிரிவுகள் அதிகம் தோற்றம் பெறுவதற்கு பிரதான காரணியாக விளங்கியது.

மேலும் வஹ்ஹாபிகள் மதீனாவில் வாழ்ந்த அப்பாவி சுன்னி சூபிகளுக்கெதிராக கிளர்ந்தெழுந்தனர் தாயிப், ஹறம் ஷரீப் என்று பாராது தமது வஹ்ஹாபிஷ கொள்கைக்கு உடன்படாதவர்களைக் அநியாயமாக கொன்று குவித்தனர் அதில் சிறியவர், முதியவர், குழந்தைகள் என்ற வயது வேறுபாடின்றி நடந்து கொண்டனர் உஸ்மானிய பேரரசின் ஆளுகைக்குட்பட்ட பிரதேசங்களில் இருந்து வரும் ஹஜ்ஜாஜுகளுக்கு ஹஜ் கிரியையை நிறைவேற்ற தடை விதித்தனர், மக்காவை முற்றுகையிட்டனர் அதன் விளைவாக ஹறம் ஷரீபில் உணவுத் தட்டுப்பாடு நிலவியதில் மக்கள் பன்றியின் மாமிசத்தைக் கூட புசித்தார்கள் என (உன்வானுல் மஜ்த் பீ தாரீகி நஜ்த்) எனும் நூலில் பதியப்பட்டுள்ளது.

வழிகெட்ட கவாறிஜ்களைப் பற்றி ஸஹீஹுல் புஹாரி இல் இடம்பெற்றுள்ள நபிமொழியில் கவாறிஜ்கள் முஸ்லிம்களைக் கொலை செய்வார்கள் சிலை வணங்கிகளை விட்டு விடுவார்கள் எனும் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் தீர்க்க தரிசனத்துக்கேற்ப வஹ்ஹாபிகள் பிரித்தானிய ஏகாதிபத்தியவாதிகளுடன் சேர்ந்து கொண்டு முஸ்லிம்களைக் கொன்று குவித்தார்கள்

இவ்விடயமும் நினைவிற் கொள்ளப்பட வேண்டியதாகும்.

மேலும் ஜுஹைமான் அல் உதைபி (1934 - 1979) போன்ற போலி மஹ்தி பிரச்சாரகர்கள் மக்கா ஹறம் ஷரீபை முற்றுகையிட்டு நூற்றுக் கணக்கான அப்பாவி மக்களின் உயிர்கள் காவு கொள்ளப்பட்டதில் வஹ்ஹாபிஷ அடிப்படைவாத சிந்தனை தாக்கம் செலுத்தாமலில்லை இவ்வாறான சூபித்துவ ஆன்மீகத்துக்கு எதிரான இப்னு அப்துல் வஹ்ஹாபின் நவீன கொள்கைகள் காரணமாக உஸ்மானிய பேரரசுக்கு எதிரான நடவடிக்கைகளில் ஈடுபட்டார் இறுதியில் இப்னு ஸுஊதுடன் இணைந்து ஹிஜாஸில் இருந்து இஸ்லாமிய ஆட்சியை வீழ்த்த முனைப்புடன் செயற்பட்டார் அதன் பலனாக இஸ்லாமிய ஆட்சியும் முடிவுக்குக் கொண்டு வரப்பட்டது பின்னர் பிரித்தானியரின் செல்வாக்குடன் சவுதி அரேபியா எனும் ஓர் புதிய நாடு ஹிஜாஸில் ஜனனமானது.

இவ்வாக்கத்தில் இன்னுமொரு வரலாற்றுத் தகவலையும் பதிவு செய்யவேண்டியது அவசியமாகும். பிரித்தானிய உளவாளி தோமஸ் எட்வர்ட் லோரன்ஸைப் (தீ லோரன்ஸ் ஆப் அரேபியா) போலவே வஹ்ஹாபி பிரிவை (சில ஆய்வுகள் சொல்வது போல், உளவாளி ஹம்பரின்

முயற்சியினால்) நிறுவியதாக உஸ்மானியர்கள் ஆங்கிலேயர்களையும் யூதர்களையும் குற்றம் சாட்டுவதற்கான மூலோபாய காரணிகளையும் நினைவில் கொள்வது அவசியமாகும்.

"உஸ்மானிய கொடுங்கோன்மையிலிருந்து விடுதலை" என்ற பெயரில் கலீபாவை அகற்ற ஆங்கிலேயர்களின் சேவையில் ஷரீப் ஹுசைன் இப்னு அலி (இவர் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் குடும்பத்தைச் சேர்ந்தவர் தற்போதய ஜோர்டான் மன்னர் இரண்டாம் அப்துல்லாஹ் அவர்களின் தந்தை வழிப்பாட்டனாவார், மேலும் அன்றைய உஸ்மானிய ஆட்சியில் மக்காவின் கவர்னராக இருந்தவராவார் இவரை பிரிட்டிஷார் ஆட்சி அரியணையில் அமர்த்துவதாக ஆசை காட்டிய போது அதற்கு அடிபணிந்து பிரிட்டிஷ் விசுவாசத்திற்காக கிலாபத்துக்கெதிரான மாபெரும் அரபு கிளர்ச்சியை உளவாளி லோரன்ஸின் உதவியுடன் மேற்கொண்டார்.

உஸ்மானிய கிலாபத் வலுவிழந்து கொண்டிருக்கும் இறுதித் தருவாயில் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் அவருக்கு வாக்களிக்கப்பட்ட அரியனையைக் கொடுத்தது 1916 ஆம் ஆண்டு தன்னை முழு அரபு தேசத்தின் மன்னராக பிரகடனம் செய்தார் எனினும்

நேச நாடுகள் அவரை ஹிஜாஸின் மன்னராகவே அங்கீகரித்தன.

1924 ஒக்டோபர் 05 இல் ஹிஜாஸினுடை தனது ஆட்சி பீடத்தில் நான்கு மகன்களில் மூத்தவரான அலி அப்துல்லாஹ்வை ஏற்றினார். அதன் பிற்பாடு ஸுஊத் குடும்பத்துக்கும் அவருக்குமத்தியில் அதிகாரப் போர் மூண்டது . மக்காவை ஸுஊத் குடும்பம் கைப்பற்றி ஹிஜாஸின் ஆட்சியையும் கைப்பற்றியது ஷரீப் ஹுசைன் சைப்ரஸில் தஞ்சம் புகுந்தார் எனினும் அரசாட்சி அவரோடு முடிந்து விடவில்லை பிற்காலத்தில் ஈராக், ஜோர்டான் பகுதிகளில் அவருடைய இரு மகன்கள் ஆட்சி பீடம் ஏறியதும் குறிப்பிடத்தக்க விடயமாகும்.

இவ்வாறு இஸ்லாமிய ஆட்சியான உஸ்மானிய பேரரசானது அதிகார வெறிபிடித்த ஸுஊத் குடும்பம் , வஹ்ஹாபிஷ அடிப்படைவாதம் போன்றவற்றின் முழு ஆதரவுடன் யூத பிரித்தானிய ஏகாதிபத்தியவாதிகளால் துண்டாடப்பட்டு இன்று முஸ்லிம்களை தலைமையேற்று நடாத்தும் ஓர் வழிகாட்டி, நிலையான ஆட்சியின்றி யூதனின் அஜன்டாவுக்கு எப்போதும் செவிசாய்ப்பதனையும் பலஸ்தீன் இஸ்ரேல் விவகாரத்தில் சுன்னி நாடுகளின் இரட்டை நிலைபாடும் ஷீஆ ஆதரவு நாடுகளின் பலஸ்தீனுக்கான முழு அங்கீகாரம்

போன்றன அரபுலகம் ஸ்திரமற்று இருப்பதனை வெளிச்சம் போட்டுக் காட்டுகின்றன.

இவைகள் யாவும் இஸ்லாமிய கிலாபத் வீழ்ந்ததால் இச்சமுதாயம் பெற்றுக்கொண்ட சன்மானங்களாகும்.

அன்று உஸ்மானிய கிலாபத்தின் கீழ் இன்றைய கணிப்பின்படி சுமார் 43 நாடுகள் நிர்வகிக்கப்பட்டன எனினும் நிர்வாக ரீதியாக சில தளர்வுகள் காணப்பட்ட போதிலும் இஸ்லாமிய சமுதாயத்தினை ஒன்றினைப்பதில் உஸ்மானிய ஆட்சி வெற்றி கண்டது என்றுதான் கூறவேண்டும் இவ்வாறு முஸ்லிம் சமுதாயம் உஸ்மானிய கிலாபத்தின் கீழ் ஒன்றுபட்டிருப்பது உலகின் மூலை முடுக்குகளில் எல்லாம் தனது காலனித்துவத்தைப் பதித்துக் கொண்டிருந்த பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்கு தலையிடியாக மாறியது எப்படியாவது இஸ்லாமிய உம்மத்துக்குள் தன் தனித்துவமான பிரித்தாளும் சூழ்ச்சியினால் பிரிவினையினை உருவாக்கி இஸ்லாமிய கிலாபத்தின் கீழ் இருந்த நாடுகளை வளைத்துப் போட முடிவு செய்தனர் மேலே கூறப்பட்டது போன்று நிர்வாக, மார்க்க ரீதியாக முஸ்லிம் சமுதாயத்தை பிளவுபடுத்த நாடினர் அதன் பயனாக வஹ்ஹாபிஷ உருவாக்கம் உஸ்மானிய பேரரசின்

வீழ்ச்சி என்பனவற்றை லாவகமாக அடைந்து கொண்டனர்.

நிர்வாக ரீதியாக இஸ்லாமிய நாடுகள் இருந்தபோதிலும் இற்றை வரையில் வஹ்ஹாபிஷ அடிப்படைவாதத்தின் தாக்கமானது இஸ்லாமிய சமுதாயத்தை இற்றை வரையில் விட்டொழியவில்லை என்பதே உண்மை. சுமார் 600 வருடங்களாக இஸ்லாமிய உம்மத்தைக் கட்டியாண்ட உஸ்மானிய கிலாபத் 1923 ஒக்டோபர் 29 அன்று தன் முழு அதிகாரத்தையும் விட்டு ஒதுங்கியது.

விஷயம் இவ்வாறிருக்க கிலாபத் கோஷம் போடும் நவீன இயக்கங்கள் வஹ்ஹாபிஷத்தை தங்கள் சன்மார்க்க கோட்பாடாக தழுவிக் கொண்டு எட்டாக்கனிக்கு கொட்டாவி விடுவதானது வேடிக்கையிலும் வேடிக்கையே ....!

இவ்வாக்கிமானது யார் மனதையும் புண்படுத்தும் நோக்கில் எழுதப்பட்டது அல்ல என்பதனையும் வரலாற்றில் மறைக்கப்பட்ட சில உண்மைகளை வெளிக்கொண்டு வருவதற்காகவே என்பதனையும் விளங்கிக் கொள்ளவும் .........